# முன்னுரை

தருமபுரி மாவட்டம் குன்றுகளும் காடுகளும் நிறைந்த பகுதி. சற்று வறண்ட பகுதியும் கூட. ஆதலின் தஞ்சை, திருச்சி மாவட்டங்களைப் போல அதிக கோயில்கள் இங்கு இல்லை. இவற்றிற்கு அளிக்கப்பட்ட கல்வெட்டுகளும் மிகவும் குறைவே. இருப்பினும், வரலாற்றிற்குப் பல புதிய செய்திகளை இப்பகுதி அள்ளி அளித்துள்ளது. ஒன்றைப் போன்றே கல்வெட்டுகள் இல்லாமல், பலதரப்பட்ட கல்வெட்டுகளும், பல் வேறு வகைப் பட்ட செய்திகளைத் தரும் சின்னங்களும் இங்கு உள்ளன. பலவகைப் பட்ட நடுகற்கள், தூரத்தைக்குறிக்கும் காதக்கற்கள் (மைல்கல்), எல்லைக் கற்கள், தெய்வச்சிலைகளில் உள்ள கல்லெழுத்துக்கள் எனப் பலவாறுகக் கல்வெட்டுகள் உள்ளன. இதுகாறும் கிடைத்துள்ள நடுகற்களில் மிகவும் தொன்மையானது என்று கூறும் அளவுக்கு உள்ள நடுகற்கள் இம் மாவட்டத்தில் கிடைத்துள்ளன. அதே போன்று வட்டெழுத்துக்களின் வளர்ச்சியை அறிந்துகொள்ள மிகவும் சிறந்த கல்வெட்டுகள் இங்கு கிடைத்துள்ளன. காட்டுப் பகுதிகள் ஆகையால் இம்மாவட்டத்தின் பெரும் பகுதி அதிகம் இதுகாறும் ஆயப்பெறவில்லை.

**நடுகற்கள்**

தர்மபுரி மாவட்டத்தில் ஒவ்வொரு ஊரும் ஆய்வு செய்யப்பட்டு உள்ளன. கல்வெட்டு அனைத்தும் அச்சாகி வருகின்றன. இந்நூல் முதல் தொகுதியாக வெளிவருகிறது. இத்தொகுதியில் அரூர், ஊத்தங்கரை, ஓசூர் வட்டங்களைச்சார்ந்த கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ளன. இறுதியில் ஊர், அரச குலம், அரசன், சொற்கள் ஆகியவற்றின் வரிசைகள் கொடுக் கப்பட்டுள்ளன.

இங்கு நடுகற்கள் ஏராளம் கிடைத்துள்ளன. இவற்றில் மிகவும் தொன்மையானவை பாப்பம்பாடி (இருளப்பட்டி) என்னும் இடத்தில் கிடைத்தவை. இரண்டு நடுகற்கள் இங்கு கிடைத்துள்ளன. இரண்டும் ஒரே போரில் இறந்துபட்ட வீரர்களுக்காக எடுக்கப்பட்டவை. விஷ்ணு வர்மன் என்னும் பல்லவன் இப்பகுதியை ஆண்டிருக்கிறன். அப்பொழுது ஒருபடையெடுப்பு நடந்திருக்கிறது. அப்படையெடுப்பில் தகடூர் நாட்டை ஆண்ட கங்கன்மேல் படைவந்தது. அதோடு எதிர்த்து நின்று போரிட்டு மடிந்தனர் ஒருவாணனும் அவனது இரு சேவ வீரர்களும். இப்பகுதியிலும் செங்கம் பகுதியிலும் கிடைத்துள்ள பல கல்வெட்டுகள் 'கோவிசைய' எனத்தொடங்குகின்றன. இவைகளைப் பல்லவர் கல்வெட்டுகள் எனக் கொண்டுள்ளோம். பல்லவர் கல்வெட்டுகள் 'கோ விசைய' எனத் தொடங்

கும் என்பது நன்கு அறிந்ததே. ஆதலின் விண்ணவர்மன் என்பவன் பல்லவன் என்று கொள்வதே பொருந்தும். கி. பி. 6-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஆண்ட இந்த பல்லவ விஷ்ணுவர்மன் யார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. சிம்மவிஷ்ணுவின் மூதாதையர்களில் ஒருவராக இருக்கலாம். அக்காலத்திலேயே இப்பகுதியில் கங்கர்களும் பாணர்களும் பல்லவர்களுக்கு அடிபணிந்து சிற்றரசர்களாக ஆண்டிருக்கிருர்கள் என்று தெரிகிறது.

சிம்மவிஷ்ணு என்று பெயர் பெற்ற அரசனின் ஆறு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவை அவனது 19-ம் ஆட்சியாண்டிலிருந்து 27-ம் ஆண்டு வரை கிடைக்கின்றன. சிம்மவிஷ்ணு 33 ஆண்டுகள் ஆட்சி செய்துள்ளான் என்று செங்கம் நடுகற்களில் இருந்து கண்டோம் (1970/31). ஆதலின் சிம்மவிஷ்ணுவின் ஆட்சி தொடர்ந்து இங்கு நிலவியிருக்கிறது. அவன் காலத்தில் இங்கு பாலாசிரிசர் என்பவன் சிறுபாழ் என்ற பகுதியை சிற்றரசனுக ஆண்டிருக்கிருன். இவனது மூன்று மக்கள் வீர மரணம் அடைந்திருக்கிருர்கள். அவர்களுக்கு எடுக்கப்பட்ட நடுகற்கள் கிடைத்துள்ளன. மகேந்திரவர்மன் காலத்திய கல்வெட்டுகள் அவனது 7-ம் ஆண்டிலிருந்து 20-ம் ஆண்டு வரை காணப்படுகின்றன. நரசிம்மவர்மனது கல்வெட்டு ஒன்று உள்ளது. அது அம்மன்னனுக்கு 'நரசிங்க விஷ்ணு' என்று பெயர் கொடுக்கிறது. நரசிங்கவிஷ்ணு என்ற பெயர் இரண்டாம் நரசிம்மனுகிய இராஜசிம்மனுக்கு காஞ்சி கைலாயநாதர் கல்வெட்டில் காணப்படுகிறது. ஆதலின் இம்மன்னன் இரண்டாம் நரசிம்மனு என்பது ஆராய்ச்சிக் குறியது (59-1974-71.).

ஈச்வரவர்மனது கல்வெட்டுகள் இரண்டு உள்ளன. அவை இரண்டாவது ஆண்டைக் குறிக்கின்றன. ஈச்வரவர்மன் என்பவன் இப் பகுதியில் இரண்டாம் மகேந்திரவர்மன் காலத்தில் சுமார் 17 வருடங்கள் ஆண்டிருக்கிருன் என்று ' செங்கம் நடுகற்கள் ' என்னும் நூலில் கூறியுள்ளோம். இதே காலத்தில் ஆண்ட கங்க அரசர்கள் ஸ்ரீபுருஷன், சிவமாரன் முதலியோரின் கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன. இவற்றில் சிவமாரன் கல்வெட்டிலும் ஈச்வரவர்மன் கல்வெட்டிலும் கந்தவாணதியரையர் என்பவன் குறிக்கப்படுகிருன். ஆதலின் இந்த சிவமாரன் பல்லவ ஈச்வரவர்மனின் காலத்தையொட்டி ஆண்டவனுக இருக்கக்கூடும். கங்கர்களில் அத்திமல்லன், திரிபுவனமல்லன், மல்லபூர்வாதிராஜன் ஆகியோர் சோழர் காலத்தவர். கட்டிணைபருமன் என்பவன் ஒருவனுடைய இரு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. அவன் 37 ஆண்டுகள் ஆண்டிருக்கிருன். இவனது கல்வெட்டிலும் கந்தவாணதியரையர் என்பவன் குறிக்கப் பெறுகிருன். இவர்களது வரலாறு ஆராய்ச்சிக்குறியது. திரிபுவன மல்லபூர்வாதிராஜன் என்பவன் மிகவும் பிற்காலத்தில் சிறந்து காணப்படுகிருன்.

பாணர்களில் அறிமிறை மாவலிவாணராயர் என்பவனும் மாவலி வாணராயர் என்பவனும் தங்களது ஆட்சியாண்டைக் குறிப்பதால் வலிவுள்ளவர்களாக ஆண்டிருக்கிறார்கள் என்று கொள்ளலாம். இங்கு நுளம்பர்களது கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. வீரநுளம்பன், நுளம்ப வீரசோழன், வியளேச்சுரன், ஐயப்பதேவன் ஆகிய நுளம்பர்கள் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறார்கள்.

கி. பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் ஒன்றிரண்டைத் தவிர பிற அனைத்தும் நடுகற்களாகவே இருப்பது குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

தீர்த்த மலையில் உள்ள ஒரு துர்க்கைச் சிற்பம் சிறப்பு வாய்ந்தது. அதில் துர்க்கையின் அருகில் ' ஸ்ரீ பகவதி குறுச்சூலி ' என்று குறிக்கப் பட்டுள்ளது. இதே போன்று மற்றொரு கல்வெட்டுப் பொறித்த துர்க்கை சிலை சென்னையில் coronet-கம்பெனியாரிடம் உள்ளது. இதுவும் அப்பகுதியில் இருந்து வந்திருக்க வேண்டும். பண்டைய காலத்தில் தெய்வ உருவங்களைக் கல்லில் வடித்து அதிலேயே எழுதி வைக்கும் பழக்கம் இருந்தது என இதிலிருந்து அறியலாம். நடுகற்களில் வீரன் உருவமும் பெயரும் எழுதுவதைப் போலவே இது இருக்கிறது. இரண்டு மரபுகளும் ஒன்றேபோல் தோன்றுகிறது.

**கோயில்கள்**

சோழர் காலக் கல்வெட்டுகள் கோயில்களுக்கு கொடுத்த கொடை களை பெரும்பாலும் குறிக்கின்றன. இக்காலத்தில் சிந்தகப்பாடியில் இருக்கும் சிவனீசுரமுடையார் கோயில் மிகவும் சிறப்பாக திகழ்ந்திருக் கிறது. முதல் ராஜராஜன் காலம் முதல் இக்கோயிலுக்குப் பல கொடைகள் அளிக்கப்பட்டுள்ளன. தீர்த்தமலையில் உள்ள மகாதேவர் கோயிலும் மிகவும் புகழ் வாய்ந்ததாக இருந்திருக்கிறது. முதல் இராஜேந்திர சோழன் காலத்தில் உத்தமசோழப் புறமலை நாடாழ்வான் என்பவன் இக் கோயிலைப் புதுப்பித்து முகமண்டபம் எடுத்திருக்கிறான். கி. பி. 13-ஆம் நூற்றாண்டிலிருந்து சிறப்பைப் பெற்றது ஒசூர் செவிட நாயனார் (சந்திர சூடேச்வரர்) கோயிலாகும். அக்காலத்தில் ஒசூர் செவிடப்பாடி என்று அழைக்கப்பட்டது. ஹொய்சாள மன்னர்களான வீரராமநாதன், வல்லாள தேவன், வீரவிஸ்வநாதன் ஆகியோர் காலத்தில் தானங்கள் இக்கோயிலுக்கு அளிக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது குலோத்துங்க சோழன் காலத்தில் கம்பய நல்லூர் என்பது ராஜராஜ அதியமானான விடுகாதழகிய பெருமாள் என்பவனால் சிறப்புப் பெற்றது. விடுகாதழகியபெருமாளான இராஜராஜ அதிகன் குலோத்துங்கனின் 22-ஆம் ஆண்டில் இக்கோயிலுக்கு சுற்றளி எடுத்தான். அதை மிக அழகிய பாடலாக எழுதியுள்ளான். இவன் கவிதையில்

ஈடுபாடு கொண்டவன் என்பதற்கு இதுவும் ஒரு சான்று. பல இடங்களில் இவனது கல்வெட்டுகள் பாடல்களாகவே கிடைத்துள்ளன. அத்துடன் இவன் 'நமசிவாய' என்னும் பஞ்சாக்ஷர மந்திரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவன். இதை 'யந்திரம்' போல் இருமுறை எழுதி அதை இங்கு கல்வெட்டிலும் பொறித்து வைத்திருக்கிறான். இதேபோல் 'விலங்கா மொழி' என்னும் தன்பெயர் ஒன்றையும் இவ்வாறு எழுதியுள்ளான். எண்களைக்கொண்டும் இதுபோல் 'யந்திரம்' அமைத்து ஒரு புதிர்போல் எழுதியுள்ளான். இது எதைக் குறிக்கிறது என்று விளங்கவில்லை. 13ம் நூற்றாண்டில் இவ்வூர் நாகையந் பள்ளி என அழைக்கப்பட்டது. 15ம் நூற்றாண்டில் இதன்பெயர் கம்பையநல்லூர் என மாறிக் காணப்படுகிறது.

கிருஷ்ணதேவராயர் ஆண்ட காலத்தில் 1511ல் இங்கு வீர வல்லாளன் என்னும் போசளன் சிற்றரசனாகத் திகழ்ந்திருக்கிறான் (140). இக்கல்வெட்டில் கிருஷ்ணதேவராயரின் பெயர் குறிக்கப்படாமல் சக ஆண்டு மட்டும் குறிக்கப்பட்டுள்ளது நோக்கத்தக்கது. இக்கல்வெட்டில் 'குடங்கை மான்யம்' என்று ஒன்று குறிக்கப்படுகிறது. இது மேலும் ஆராய்ச்சிக்கு உரியது.

## நாட்டுப் பிரிவு

இப்பகுதியிலுள்ள கல்வெட்டுகளைக் கொண்டு இப்பகுதியின் நாட்டுப் பிரிவுகளை அறிய இயலும். தொண்டை மண்டலம், பாண்டி மண்டலம் என்பது போல், இப்பகுதி முழுவதும் ஒரு மண்டலம் என்று தனியாகப் பிரிக்கப்படவில்லை போலும்! கி. பி. 7ம் நூற்றாண்டு வரை இங்கு ஐந்து நாடுகள் குறிக்கப்படுகின்றன. அவை புறமலை நாடு, கோவூர் நாடு, மீகொன்றை நாடு, மீவேணாடு, தகடூர் நாடு என்பவையாகும். இவற்றில் புறமலை நாடும், கோவூர் நாடும் மிகவும் சிறப்பாக திகழ்ந்திருக்கின்றன. இவற்றுடன் மேலும் 6 நாடுகள் 8-9ம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இவை புதியதாக ஏற்படுத்தப்பட்டவையா அல்லது முன்னரே இருந்தவையா என்று கூறுவது இயலாது. சில நாடுகளாவது முன்னரே இருந்திருக்க வேண்டும். இவ்வாறு புதிதாகக் கூறப்பட்டுள்ள நாடுகள் கங்க நாடு, கோயிலூர் நாடு, வேளாள நாடு, தாயனூர் நாடு, வேள்கலி நாடு, மன்ன நாடு என்பவையாகும். எயில் நாடு என்பதும் குறிக்கப்படுகிறது.

கி. பி. 9ம் நூற்றாண்டின் இறுதியிலும் 10ம் நூற்றாண்டின் முதல் பகுதியிலும் இப்பகுதி நுளம்பர் கைப்பட்டது. ஆதலின் இப்பகுதியை நுளம்பபாடி என்னும் பொதுப் பெயரால் மாற்றி அழைத்தனர் போலும். முதல் ராஜராஜன் தான் கைப்பற்றிய இடங்களோடு நூளம்பபாடியையும் குறிக்கிறான். ஆதலின் நூளம்பர்களது ஆட்சி இங்கே

இராஜராஜன் காலத்திலிருந்து அறவே ஒழிக்கப்பெற்றது என்றும் அவர்கள் சிற்றரசர்களாக்கப்பெற்றனர் என்றும் தெளியலாம். இராஜ ராஜன் தமிழ்நாட்டின் பல மண்டலங்களின் பெயர்களையும் மாற்றி ஒரு பேராட்சியை நிறுவினான். அப்பொழுது அனைத்து மண்டலங்களுக் கும் தன் பெயரையே வைத்தான். தொண்டை மண்டலம், ஜயங்கொண்ட சோழ மண்டலமாயிற்று. அதுபோல நுளம்பபாடியின் பெயரை யும் நிகரிலி சோழ மண்டலம் என்று மாற்றியமைத்திருக்கிறான். இந்தப் பகுதியில் இராஜராஜனின் 25-ம் ஆண்டு கல்வெட்டு கிடைத் துள்ளது. ஆயினும் அதில் இப்பிரிவு குறிக்கப்படவில்லை. முதல் இராஜேந்திர சோழனின் கல்வெட்டில் இந் நாட்டுப்பிரிவு குறிக்கப் படுகிறது. "நுளம்பபாடியான நிகரிலி சோழமண்டலம்" என்று குறிக்கப் படுவதால் இது நுளம்பபாடி என்று அழைக்கப்பட்டது என்பதும், நிகரிலி சோழமண்டலம் என்று மாற்றியமைக்கப்பட்டது என்பதும் தெளிவாகிறது.

தகடூர்நாடு, புறமலை நாடு, எயில் நாடு ஆகிய நாடுகளுடன் அலை மலை நாடு, வல்லவரையர் நாடு என்று இரு புதிய நாடுகள் இக்காலக் கல் வெட்டுகளில் இடம்பெறுகின்றன (54, 63). கி. பி. 12-ம் நூற்றாண்டில் புலிகறை நாடு என்ற நாடு குறிக்கப்படுகிறது.

கி. பி. 11-ம் நூற்றாண்டில் நிகரிலிசோழ மண்டலம் என்று பெயர் பெற்ற இப்பகுதியின் பெயர் 13-ம் நூற்றாண்டில் மீண்டும் ஒரு மாற் றத்தை அடைந்து முடிகொண்ட சோழமண்டலம் என்று பெயர் பெற்றது. இம்மாற்றம் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் ஏற்பட்டிருக்கவேண்டும். மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் இப்பகுதி சோழர்கையை விட்டுச் சென்று மீண்டும் குலோத்துங்கனால் கைப்பற்றப்பட்டது. ஆதலின் இப் பெயர் மாற்றம் ஏற்பட்டிருக்கவேண்டும்.

சோழராட்சியில் தமிழகத்தின் பிறபகுதிகளில் "வளநாடுகள்" என்னும் பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன. ஆனால் இப்பகுதியில் இரண்டே வளநாடுகள் குறிக்கப்படுகின்றன. ராஜேந்திரசோழ வளநாடு (146) என்றும் எதிரிலிசோழவளநாடு என்றும் இருபிரிவுகள் மட்டும் காண்கி றோம். இப்பகுதி வறண்ட பகுதியாதலால் இவ்வாறு அமைந்ததுபோலும்.

கி. பி. 13-ஆம் நூற்றாண்டில் ஓசூர் பகுதி 'முரசு நாடு' என்னும் ஒரு புதுப் பிரிவாகக் காணப்படுகிறது. கடத்தூர் நாடு, பெரிய நாடு, மாசந்திநாடு, தென்கூற்றுநாடு என புதிய நாடுகளின் பெயர்களை 13-16-ஆம் நூற்றாண்டுகளில் காண்கிறோம். இதே காலத்தில் நாட்டுப் பிரிவுகளுள் 'பற்று' என்னும் புதுப்பெயரைக் காண்கிறோம். 'நாடு' என்னும் பெயர் குறைந்து 'பற்று' என்று அழைக்கப்படுவதைக் காண் கிறோம். ஆரப்பூர் பற்று (51), தாமலூர் பற்று (12) என்பவை 13-ஆம்

நூற்றுண்டிலும், தென் பற்று (74) 14-ஆம் நூற்றுண்டிலும், மூக்கனூர் பற்று (10, 11) என்பது 15-ஆம் நூற்றுண்டிலும், குடில் பற்று (70) என்பது 16-ஆம் நூற்றுண்டிலும் இவ்வாறு தோன்றிய பற்றுக்களாகும். இவை போசளர்களின் வருகையால் ஏற்பட்ட மாற்றங்கள்.

விஜய நகர அரசர்களின் வருகை 'சீர்மை' என்னும் ஒரு புதிய பிரிவைக் கண்டது. குந்தானிச் சீர்மை (58) என்பது இவ்வாறு 16-ஆம் நூற்றுண்டில் ஏற்பட்டதாகும்.

இப்பகுதிகளை ஆய்ந்து படியெடுத்துப் படித்தவர்கள் திரு. நடன. காசிநாதன், திரு. கு. தாமோதரன், திரு. அ. அப்துல்மஜீத், திரு. ச. ஹரிஹரன், திரு. மா. சந்திரமூர்த்தி, திரு. அரங்க. பூங்குன்றன், திரு. க. குழந்தைவேலன், திரு. சு. இராசகோபால், திரு. பொ. இராசேந்திரன், திரு. மா. செந்தில் செல்வக்குமரன், திரு. கி. ஸ்ரீதரன் ஆகியோராவர். மற்றும் இவர்களுடன் செல்வி. நா. மார்க்சீய காந்தி, திருமதி. ஜெ. விசயலக்குமி ஆகியோரும் கல்வெட்டுகளைப் படித்துள்ளனர். இத்துறைக் கல்வெட்டுப் பயிற்சி மாணவர்களும் பயிற்சிபெறும் முகத்தான் இவ்வாய்வுக்குத் துணை புரிந்துள்ளனர். இவர்களுக்கு எனது நன்றி.

இரா. நாகசாமி

# 1

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 11-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | அச்சல்வாடி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : வேடியப்பன் கோயில்.

குறிப்புரை : வீரனின் வலக்கரத்தில் கத்தி. இடக்கரத்தில் வில். மார்பிலும் தலையிலும் அம்பு பாய்ந்துள்ளன. புலிக்கல் என்ற ஊரில் எருமைத்தொறு கவர்ந்த போது ஈதண்ணிமாரமன் என்பான் மாண்டான்.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ புலிக் [கல்]
2 லில் எருமைத் தொறு
3 க்கொளில் பட்டான் ஈதண்
4 ணி மாரமந்

# 2

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | அரூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : காளியம்மன் கோயிலில், காளியம்மன் சிலையின் பின் உள்ள கல்வெட்டு.

குறிப்புரை : அரூர் காளியம்மன் கோயிலில் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தியதாக இலக்குமி உருவம் பொறித்த ஒரு பலகைக் கல் காணப்படுகின்றது. இக்கல்லே இவ்வூர் மக்களால் காளியம்மனாக வணங்கப் படுகிறது. இக்கல்லின் முன்புறம் இலக்குமி போன்ற உருவமும் பின் புறத்தில் துண்டுக் கல்வெட்டும் உள்ளன. மீதி கல்வெட்டுப் பகுதி தரையின் கீழ் மறைந்து விட்டது. இக்கல்வெட்டில் சிவகாத சேகர கற்கடக மாராயன் கண்ணன் படலன் என்பவனும், விடுகாதழகிய நல் லூரும் குறிக்கப்படுகின்றன. இவ்விடுகாதழகிய நல்லூர் மூன்றாம் இராஜராஜனு டைய தருமபுரி அரியரநாதசுவாமி கோயில் கல்வெட்டிலும் குறிக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1 . . . . . . . . . .
2 . . . . . நஞ்சை புன்செ[ய்] நாற்பால்லெ
3 ல்லையும் மேனோக்கின மரமும் கீ
4 ழ்நோக்கின கிணறும் மகப்பட கா[ரா]
5 யம் பள்ளியில் வியாபாரி ஐய்யன் தேவ
6 னுக்கு பொருளறக் கொண்டு மண்ண
7 றக் குடுத்தேன் சிவகாதசேகரக் கற்க
8 ட மாராய[ந்][1] கண்ணந் படலன்நேன்
9 விடுகாதழகிய நல்லூரான அரியூர்தி
10 . . . . . . . . .

1. சிவபாதசேகர கற்கடக மாராயனாக இருக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 8-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | அலமேலுபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | வட்டெழுத்து | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : கோட்டை மேட்டில் சிதைந்துள்ள நடுகல்.

குறிப்புரை : நடுகல் கல்வெட்டின் முதற் பகுதி கிடைக்கவில்லை. உருவத்திலும் கால் பகுதி மட்டுமே எஞ்சியுள்ளது. பெரும் பாணரைசரின் சேவகன் 'வெளிய நக்கன்' என்பது மட்டும் தெரிகிறது.

கல்வெட்டு :

1 ப்புமை அ
2 ழித்த பெரு
3 ம் பாணதி
4 அரையர் சே
5 வகன் வெளி
6 ய நக்கன்

மாவட்டம் : தருமபுரி

வட்டம் : அரூர்

ஊர் : அலமேலுபுரம்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : நுளம்பர்

மன்னன் : வியளேச்சுரன்

ஆட்சி ஆண்டு : —

வரலாற்று ஆண்டு : கி. பி. 10-ஆம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : —

முன் பதிப்பு : —

ஊர்க் கல்வெட்டு எண் : 2

இடம் : கோட்டை மேட்டில் உள்ள செக்குக் கல்

குறிப்புரை : நுளம்ப மன்னன் பெயரால் இறையபன் என்பான் உருவாக்கிய செக்கு.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ வியளச்செர நுளம்பராற் குறை

2 இடமாரி மகந் இறையபதிட்ட செக்கு.

# 5

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 7-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | உட்டபட்டிதண்டா | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | வட்டெழுத்து | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

**இடம் :** ஊருக்குத் தென்கிழக்கில் காட்டில் குண்டத்தாற்றங்கரையில் உடைந்து கிடக்கும் நடுகல்.

**குறிப்புரை :** வேண்மங்கலத்து அரசனோடு பண்நஏறைதி என்பவன் போர் செய்தான். அப்போரில் பண்நஏறைதியின் சேவகன் கங்கவிசயஏறைதி என்பான் மகன் விசைய ஏறைதி இறந்து பட்டான். அவனுக்காக எடுக்கப் பட்டது இக்கல். இக்கல் இப்பொழுது இடுப்பு வரை உடைந்த நிலையில் காறைற்றங்கரையில் கிடக்கின்றது. இதில் வீரன் வலக்கையில் வளைந்த வாளுடனும் இடக்கையில் கேடயத்துடனும் பொறிக்கப் பட்டுள்ளான். வீரனுடைய தலையில் பெரிய தலை வேட்டி கவித்த நிலையில் கட்டப்பட்டுள்ளது. இந்த உருவ அமைதியைக் கொண்டே இஃது 6 அல்லது 7-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

**கல்வெட்டு :**

1 . . . பரும . . .
2 நாட்டு வெண்மங்கலத்[து] . .
3 . . . ரைசரோடு பண்ந ஏறைதிஆரு
4 . . . ஞான்று [கோ]ட்பேர்அதி அரைச . . .
5 ன் . . . . . .
6 . . . . . . . றை
7 திஆரு சே[வ]கன்
8 [க]ங்க விசை[ஏ]
9 றைதிஆரு மக
10 ன் விசை . . .
11 தி கல்

மாவட்டம் : தருமபுரி
வட்டம் : அரூர்
ஊர் : கடத்தூர்
மொழி : தமிழ்
எழுத்து : தமிழ், கிரந்தம்
அரசு : போசளர்
மன்னன் : வீரராமநாதன்

ஆட்சி ஆண்டு : 33-ஆம் ஆண்டு
வரலாற்று ஆண்டு : கி. பி. 1287
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : —
முன் பதிப்பு : —
ஊர்க் கல்வெட்டு எண் : 1

இடம் : காந்திபுரம் சந்தைப் பேட்டையில் உள்ள வடக்கு நோக்கியுள்ள கல்வீடு

குறிப்புரை : போசள அரசன் வீரராமநாதனுடைய 33-வது ஆட்சியாண்டில் கடத்தூர்ப் பகுதியை ஆட்சி செய்த அதிகாரி ஆரோதன் இருகன் பெருமாள் என்பானுடைய மகன் ஆண்பிளைப் பெருமாள் என்பவன் புலியைக் குத்தித் தானும் இறந்து விட்டான். அவனுக்குக் கல்நட்டுச் சிறப்புச் செய்துள்ளனர். எழுத்துக்களின் கீழ்ப்பகுதியில் ஆண்பிளைப் பெருமாள், புலியோடு வீரச்சமர் புரியும் கோலம் சித்திரிக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ ஸாவ-உ ஹௌசவகூ
2 வதி ஸ்ரீ போசள வீரராமனுத
3 தேவற்கு யாண்டு ௩௰௩ வது
4 ஆடி மாதம் பதினேழாந் தி
5 யதி மகத்தி நன்று கடத்தூர்
6 நாட்டு நாயகஞ் செய்வான் ஆ
7 ரோதன் இருகன் பெருமாள்
8 மகன் ஆண்பிளைப் பெருமா
9 ள் புலியைக் கொன்று வீர
10 ஸ்வமஉம் பெற்றான்

மாவட்டம் : தருமபுரி
வட்டம் : அரூர்
ஊர் : கணப்பனூர்
மொழி : தமிழ்
எழுத்து : வட்டெழுத்து
அரசு : கொங்கணி
மன்னன் : சிவமாரன்

ஆட்சி ஆண்டு : 47-ஆம் ஆண்டு
வரலாற்று ஆண்டு : கி. பி. 8-ஆம் நூற்றூண்டு
இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை : —
முன் பதிப்பு : —
ஊர்க் கல்வெட்டு எண் : 1

இடம் : வேடியப்பன் கோயிலில் உள்ள நடுகல்.

குறிப்புரை : நடுகல். வீரன் இடக் கையில் வில்லும், வலக் கையில் குறுவாளும் கொண்டு உள்ளான். காலடியில் சிமிழ் உள்ளது. எழுத்துக்கள் அவன் தலைக்கு மேலும், இடப் புறத்திலும் உள்ளன. கல்வெட்டு சற்றுத் தெளிவாக இல்லை. சிவமார பருமரது நாற்பத்தேழாவது ஆட்சி ஆண்டில் புறமலை நாட்டைக் கந்தவாணதி அரைசர் என்பவர் ஆண்டு வந்தார். அப்பொழுது போர் ஏற்பட்டது. அதில் அவரது மகனுடைய சேவகன் வாணிகச் சடைனூர் என்பவர் இறந்து பட்டார். இதை இந்நடுகல் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்ரீசிவமார பருமற்கு யாண்டு நாற்பத்தே
2 ழாவது கந்தவாணதி அரைசரு புறமலை நாடா
3 ள அவர் மகனூர் தெளிய நி[ஒ] ஆர் சேவகர் வாணிக
4 ச் சடைனூர் வெட்டக்கியார் கூடல் [வந்துவிட] அவர்
5 மே ஆனயா
6 டி நின்று செ
7 ன்று பட்டார்.

# 8

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 7-ஆம் ஆண்டு |
| வட்டம் | அரூர் | வரலாற்று ஆண்டு | கி. பி. 597 |
| ஊர் : | கதிரம்பட்டி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி | தமிழ் | | |
| எழுத்து | வட்டெழுத்து | முன் பதிப்பு | — |
| அரசு | பல்லவர் | | |
| மன்னன் | மகேந்திரவர்மன் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : தென் பெண்ணையாற்றங்கரையில், பொன்னுச்சாமி என்பவர் காட்டில் உள்ள வேடியப்பன் கோயில்.

குறிப்புரை : பல்லவ மன்னன் மகேந்திரவர்மனுடைய ஏழாவது ஆட்சியாண்டில் காரி மங்கலத்தில் ஆநிரை கவர்தல் போர் நடை பெற்றது. அப்போரில் பங்குபெற்ற புரவர் பெற்றுண்டான் கோம்புளிகன் என்பானுடைய மகன் ஏறன் என்பானுக்கு நடுகல் கல் எடுக்கப்பட்டுள்ளது. கல்லில் வீரன் இடக்கையில் வில்லும், வலக் கையில் குறுவாளும், இடையில் அரையாடையும் உள்ள நிலையில் போருக்குச் செல்லும் தோற்றத்தில் காட்டப்பட்டுள்ளான். வீரனின் இடக்காலின் முன்புறம் கெண்டி உள்ளது. இதில் பெற்றமாண்டான் என்ற சொல்லைப் பெற்றம் ஆண்டான் என்று பிரிக்கலாம் பெற்றம்[1] என்பது ஆநிரையைக் குறிக்கும். ஆண்டான் என்பது ஆள்பவன். ஆதாவது ஆநிரைகளை உடையவன் எனப் பொருள் கொள்ளலாம். ஏறன் என்பது ஏறு + அன் ஏறு — காளை[2] அதனை உடையவனுக்குக் காரணப் பெயர்.

கல்வெட்டு :

1 கோவிசைய மயந்திர பரும
2 ற்கு ஏழாவது கோவூர் நாட்டு
3 க் காரி மங்கலங் கங்கதி அ
4 ரைச ரோடு
5 புரவ[ர்]
6 பெற்றுண்டாண்
7 டான் கொ
8 ம் புளி
9 கண் மக
10 ன் ஏறன்
11 தொறுக் கொ
12 ளுட் பட்
13 டான் கல்.

---

1 பெற்றமரும் பெருமானை யல்லால் பேசுவது மற்றோர் பேச்சிலோமே -சம்பந்தர் (5-4).
2 வெள்ளேற்றின் கொடியான் -சம்பந்தர் (149-4.)

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 7-ஆம் ஆண்டு |
| வட்டம் | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி பி 8, 9-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | கதிரம்பட்டி | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| எழுத்து | வட்டெழுத்து | | |
| அரசு | பல்லவர் ? | முன் பதிப்பு | — |
| மன்னன் | கோவிசைய பருமன்? | ஊர்க் கல்வெட்டு எண் | 2 |

இடம் : தென் பெண்ணையாற்றங்கரையில் பொன்னுச்சாமி என்பவர் காட்டிலுள்ள வேடியப்பன் கோயில்.

குறிப்புரை : மகேந்திரவர்மனது 7-ஆவது ஆட்சியாண்டில் காரிமங்கலத்தில் குளவர் என்பவருடைய மக்களிருவர் ஆநிரைகளைக் கவர்ந்த பொழுது இறந்து பட்டனர். அவர்களுக்காகக் கல்லெடுத்து உருவங்களைப் பொறித்துள்ளனர். இக்கல்லில் உடன் பிறந்தாரிருவரும் வலக்கைகளில் குறுவாளையும் இடக் கைகளில் வில்லையும் தாங்கிச் செருமுகம் நோக்கிச் செல்லும் தோற்றத்தில் பொறிக்கப் பட்டுள்ளனர். இருவரது இடைகளையும் அரையாடை அழகு படுத்துகிறது. தலையில் தலைப்பாகை அணிந்துள்ளனர். இருவரது கால்களின் முன்னர் கெண்டி போன்ற கட்குடம் வைக்கப்பட்டுள்ளது. இவர்களுடைய தலைக்கு மேல் கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் தொடக்கம் உடைந்துள்ளது. இதில் குறிக்கப்பட்டுள்ள காரி மங்கலம் இங்கிருந்து மேற்கில் சுமார் 15 கல் தொலைவில் உள்ளது.

கல்வெட்டு :

1 [கோவி] சைய பகமற் ஏழாவது கோவூர்
2 [நா]ட்டு காரி மங்கலத்து தொறுக் கொள
3 . ர் குளவர் மக்கள் நீலனுணதி[1]
4 . னுந[2] ஊடம் பிறந்திருவர். கல்.

---

1 3. நீகனுண 4. . னுட எனவும் கொள்ளலாம்.

# 10

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | சக ஆண்டு 1337<br>கி. பி. 1415 |
| ஊர் : | கம்பைநல்லூர் | | |
| எழுத்து : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| அரசு : | விஜயநகரர் | முன் பதிப்பு : | — |
| மன்னன் : | வீரதேவமகாராயர் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : கம்பை நல்லூர் கோட்டைக் கோயில் முன்மண்டபத்தின் வடக்குப்புற அதிட்டானத்தில் உள்ளது.

குறிப்புரை : விசயநகர அரசன் வீரதேவமகாராயர் காலத்தில் (கி.பி. 1415) கம்பை நல்லூர் தேசிநாயனார் மகாபூசைக்கு ஈசம்பாடி என்ற ஊரினைத் தேவதானமாகக் கொடுத்தைக் குறிக்கின்றது. இதில் குறிக்கப்படும் ஈசம்பாடி, இன்று ஈச்சம்பாடி என வழங்கப்படுகின்றது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீமன் மஹாமண்டலேஸ்வரன் அரிராய விபாடன் பாஷைக்குத் தப்பும இராயர் கண்டன் மூவராய கண்டன் இராசாதிராசன் இராஜபரமேஸ்வரன் பூர்வ தக்ஷிண பஸ்சிம உத்தர ஸமுத்ராதி பதி ஸ்ரீவீரதேவராஜ மஹாராஜன் ப்ருயாநி அன்னதாத உடை [யார்] ப்ருயிவிராஜ்யம் பண்ணி அருளா நின்ற சகாப்தம் [illegible] இதன் மேல் செல்லா நின்ற மன்மத

2 ஸம்வத்ஸரத்து ஆவணி மாஸத்து பூ(ர்வ)பக்ஷத்து [illegible]யும் வெள்ளிக்கிழமையும் பெற்ற உத்திரத்து நாள் அலைமலை தற்றிய கங்கை நாட்டுத் தகடநாட்டு மூக்கனூரபற்றுக் கம்பய நல்லூர் நாயனூர் தேசிநாயநார்க்கு மஹா பூஜை நடக்கும் படிக்கு தேவதாநம் ஆக இப்பற்றில் ஈசம்பாடி சந்திராதித்த வரையும் ஸர்வமான்யம் ஆக அந்த ஊரை

3 நோக்கி வரும் ஸர்வ ஆதாயமும் உட்பட நடக்கும் படிக்த குடுத்தோம் இந்தத் தன்மத்துக்கு அஹிதம் விசாரித்தவன் கெங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்றான் பாவத்திலே போகக் கடவன்

# 11

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 15-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கம்பைநல்லூர் | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 11/1900 |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | S. I. I. Vol. VII-11 |
| அரசு : | விஜயநகரர் | | |
| மன்னன் : | இம்மடிபுக்கராயர் | ஊர்க் கல்வெட்டு எண் | 2 |

இடம் : கோட்டைக் கோயில் கருவறை மேற்கு, தெற்கு, அர்த்தமண்டபத் தெற்கு, முன் மண்டப மேற்கு பகுதிகளில் உள்ள வேதிகையிலும், குமுதப்படையிலுமுள்ளது.

குறிப்புரை : மூக்கனூர்ப்பற்று நாட்டவர்கள், தேசிநாதர் கோயிலிற் பணிபுரிய மலையப்பட்டன் அழகிய திருச்சிற்றம்பலம் உடையான் என்பானுக்கு 'பெரிய நம்பி' என்ற பட்டம் கொடுத்து அனைத்துப் பொறுப்பினையும் அளித்ததை இக்கல்வெட்டு குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ மஹா மண்டலேச்வர ஹரிராய விபாட பாஷைக்குத் தப்புவராயர் மண்ணு ஹரிராயன் குமாரன் ஸ்ரீமது இம்மடி புக்கராயன் முன்வாய்ப்பட்[ட]ணத்தில் இருந்து திருவிராச்சியம் பண்ணி அருளாநின்ற க்ஷய வருஷத்து பங்குனி மாதம் முதல் தியதி பூறுவ பக்ஷத்து உத்திரட்டாதியும் பெற்றநாள் ஸ்ரீமது தாதி புக்கண்ண உடையர்க்கு செல்லா நின்ற காலத்து மூக்கனூர் பற்றில் நாட்டவரும் அதிகார மல்லணரும் மலையப் பட்டன் அழகிய திருச்சிற்றம்பல முடையான் ஆன பெரிய நாட்டு நம்[பிக்கு]

2 காணி ஆட்ஷி குடுத்த பரிசாவது இவர்க்கு பெரிய நாட்டில் நம்பி என்றுபட்டமுங் கட்டி சந்திருதித்த வரை உள்ள அளவும் மூக்கனூர் பற்றில் கம்பையநல்லூரில் நாயிநார் தேசிநாதர் திருக்கோயிலுக்கு திஷேத்திறவரனுமாய் சையிவா சாரியம் பூசை தேவகன்மி அழகுபகை வித்தாரம் இக்கோயி லுக்கு உள்ள இலாபலோபமும் இவனே அனுபவித்து இருக்கக் கடவன் ஆகவும் இருக்கிற அளவுக்கு மூக்கானூர்ப்பற்று மஹா

(திருப்பவும்)

நாடு இவக்கு யாரா[illegible]ழ ஆக குடுத்தபடி உளக்கு ஒரு பணமும் பத்துக்குளக்[கு]த் தாணியமும் சந்திற ஆதித்தவரை ஆக நடத்திக் குடுக்க கடவோ[மாக]வும்

3 குடாத அளவில் மண்களமுடைத்து வெண்கல எடுத்துக் கொள்ளக் கடவர் ஆகவும் இதுக்கு அயிகஞ் சொன்னவன் கெங்கைக்கரையில் குரால் பசுவைக் கொன்ருன் பாவங் கொள் ளக் கடவன் ஆகவும் இப்படிக்கு வெள்ளாறை காமிண்டர் எழுத்து இப்படிக்கு நல்லுடையப்பன் எழுத்து இப்படி அறி வேன் தேவணர் எழுத்து இப்படி அறிவோம் நாநாதேசி எழுத்து . . . . . . . . இப்படி அறிவோம் அபிமானபூஷண வேளான் எழுத்து இவர்கள் சொல்ல எழுதின மைக்கு நாட்டு கணக்கு சூரிய தேவர் எழுத்து ஸ்ரீ ℮ . . . .

# 12

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 2வது ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 1296 |
| ஊர் : | கம்பைநல்லூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 10/1900 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு | S. I. I. Vol. VII-10 |
| அரசு : | போசளர் | | |
| மன்னன் : | வீரவிஸ்வநாதன் | ஊர்க் கல்வெட்டு எண் | 3 |

இடம் : கோட்டைக் கோயில் கருவறையின் வடக்கு மேற்கு குமுதப் படைகளில் உள்ளது.

குறிப்புரை : போசள மன்னன் வீரவிஸ்வநாதனின் 2-வது ஆட்சி ஆண்டில் உத்தம சோழ கங்காதரராயன் என்பவன் நாகையன்பள்ளியான காலிங்கராயச் சதுப்பேதி மங்கலத்தில் உள்ள இறைவனுக்கு மன்னன் வீரவிஸ்வநாதனுக்கும், இவனுக்கும் நல்வாழ்வு வேண்டி கொடுத்த நிலக் கொடையைக் குறிக்கிறது. இறைவனின் பெயர் தேசி நாயகர் என்று குறிக்கப்படுகிறது.

கல்வெட்டு

1 ஸ்வஸ்தி ஸ்ரீ ப்ரதாபசக்ரவர்த்தி ஸ்ரீ பொய்சள வீரவிஸ்வநாத தேவற்கு உ வது நாகையனபள்ளியான காலிங்ராயச் சதுப்பேதி உங்கலத்து உடையார் தேசி நாயகற்குத் திருநாமத்துக் காணியாகப் புறமலை நாட்டுத் தாமலூர்ப் பற்றுப் பேழைக் கல் நஞ்செய் புன்செய்

2 நாற்பாலெல்லையும் மேனோக்கின மரமும் கீழ்நோக்கின கிணறும் மனையும் மனைப் படப்பையும் இவ்வனைத்து ஸர்வாஸ்தியும் விஸ்வநாததேவர் திருமேனி[க்]கும் திருத்தோளுக்கு வாளுக் கும் நன்றாகவும் நமக்கு நன்றாகவும் வுதகபூணமாக[1] விட் டேன் உத்தம சோழக்[க]

3 கங்காதராயனேன் இதுமாறுமவன் கெங்கைக் கரையில் குரால் பசுக் கொன்றான் ப்ரஹ்மஹத்தி கொள்வான் உ

1. உதக பூர்ணமாக என்று படிக்கவும்.

# 13

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 22 |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 1200 |
| ஊர் : | கம்பைநல்லூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 8/1900 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | Epigraphia Indica, Vol. VI p. 332 |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | 3-ஆம் குலோத்துங்கன் | ஊர்க் கல்வெட்டு எண் | 4 |

இடம் : கோட்டைக் கோயில், கருவறைத் தென்புற அதிட்டானம்.

குறிப்புரை : குலோத்துங்க சோழனுடைய 22-வது ஆட்சி ஆண்டில் விலங்காமொழி விடுகாதழகிய பெருமாள் பெண்ணைக் கரையில் சிறுக்கோட்டை என்னுமிடத்தில் தன் பெயரால் ஒரு கற்றளி எடுப்பித்தான். அவனது நாடு பாலியாறு (பாலாறு); பொன்னியாறு (காவிரி); பெண்ணையாறு என்ற மூன்று ஆறுகளை உடையது எனப் புகழப்படுகின்றது. இவன் 'காரணைய கையான்' எனப் பாராட்டப்படு கின்றான். இச்செய்திகள் யாவும் எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் அழகாகப் புனையப்பட்டுள்ளது. இங்கு குறிக்கப்பட்ட விடுகாதழகிய பெருமாள் அதிகமான் பரம்பரையில் வந்தவன் என்பது குறிப்பிடத் தக்கது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவநச்சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு உ௰உ ஆவது ௨ உரைமருவுங் குலோத்துங்க சோழ தேவற்குரைத்த யாண்டிருபதின் மேலிரண்டிற் பெண்ணைக் கரைமருவுஞ் சிறுக்கோட்டை குளன் நாகை நாயகற்களித்துக் கற்றளி தன் பேரி

2 ட்ட காரணைய கையான் திரைமருவுந் தடங்கமலத் தகடை மன்நன் செழும்பாலி பெண்ணை பொன்னித் திருநதி மூன்றுடைய விரை மருவுந் தார்மார்வன் ராஜராஜ வதிகன் விலங்காமொழி விடுகாதழகிய பெருமாளேய் ௨

மாவட்டம் : தருமபுரி
வட்டம் : அரூர்
ஊர் : கம்பைநல்லூர்
மொழி : தமிழ்
எழுத்து : தமிழ்
அரசு : -
மன்னன் : —

ஆட்சி ஆண்டு : —
வரலாற்று ஆண்டு : கி. பி. 13-ஆம் நூற்றாண்டு
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : —
முன் பதிப்பு : —
ஊர்க் கல்வெட்டு எண் : 5

இடம் : கோட்டைக் கோயில் கருவறையின் தென் சுவர்.

குறிப்புரை : I, II பகுதிகளில் 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து மந்திரம் மாறிமாறி எழுதப்பட்டுள்ளது. III பகுதியில் இதைப் போலவே சில எண்கள் எழுதப்பட்டுள்ளன. இவை மூன்றும் கருவறைச் சுவற்றில் இடமிருந்து வலதாக ஒன்றையடுத்து ஒன்றாக பொறிக்கப்பட்டுள்ளன.

கல்வெட்டு

I

ந சி ய ம வா
ய ம வா ந சி
வா ந சி ய ம
சி ய ம வா ந
ம வா ந சி ய

II

| வா | ம | ய | ந | சி |
|---|---|---|---|---|
| ந | சி | வா | ம | ய |
| ம | ய | ந | சி | வா |
| சி | வா | ம | ய | ந |
| ய | ந | சி | வா | ம |

(திருப்பவும்)

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | கம்பைநல்லூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| எழுத்து : | தமிழ் | | |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 6 |

இடம் : கோட்டைக் கோயில் கருவறைத் தென்புறச் சுவற்றில் உள்ள கால் வரியிலுள்ளது.

குறிப்புரை : விலங்காமொழி என்ற பெயர் மாறி, மாறி எழுதப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

[மொ] லங் ழி வி கா

வி கா மொ லங் ழி

லங் ழி வி கா மொ

கா மொ லங் ழி வி

ழி வி கா மொ லங்

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 2-ஆம் ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 1296 |
| ஊர் : | கம்பைநல்லூர் | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 9 / 1900 |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | S.I.I. Vol. VII No. 9 |
| அரசு : | போசளர் | | |
| மன்னன் : | வீரவிஸ்வநாதன் | ஊர்க் கல்வெட்டு எண் | 7 |

இடம் : கோட்டைக் கோயிலில் அர்த்த மண்டபத்தின் தென்புறத்திலும் முன்மண்டப மேற்குப்புறத்திலும் உள்ள குமுதப்படையில் உள்ளது.

குறிப்புரை : மதுராந்தக வீரநுளம்பன் இராசநாராயண பைரவன் என்பான் போசள அரசன் வீரவிஸ்வநாதன் நலனுக்கும், தன் நலனுக்குமாக புறமலை நாட்டுக் கடம்பர் பள்ளியில் உள்ள நன்செய் புன்செய் நிலங்களைச் சர்வமானியமாக நாகையன் பள்ளியான காலிங்கராயச் சதுர்வேதி மங்கலத்து இறைவன் தேசிநாயனூர்க்குக் கொடுத்ததைக் குறிகின்றது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ ஸாவஃமௌஃ வகூஃவத்தி ஸ்ரீ பொய்ஸல வீரவிஶ்வநாத தேவற்கு உஃஸ நாகையன் பள்ளியான காலிங்கராயச் சதுப்பேதி மங்கலத்து உடையார் தேசிநாயகற்கு திருநாமத்து காணி

2 யாக விஶ்வநாதேவர் திருமேனிக்கும் திருத்தோளுக்கும் நன்றாகவும் நமக்கு நன்றாகவும் தகடை நாட்டுப் புறமலை நாட்டு கடம்பர் பள்ளி நஞ்செய் புன்செய் நாற்பாலெல்லையும்

3 மேல் நோக்கின மரமும் கிஃநோக்கின கிணறு மணையும் மணைப்படப் பையு இந்த ஊரிஸ்வியனை[து]ம் ஸவஃமானியமாக உதகபூண மாக குடுத்தேன் மதுராந்தக வீர நுளம்பன் இராசநாராயண பைர

4 வனேன் இது மாறுமவன் கெங்கைக் கரையில் குராற்பசுக் கொன்றான் பாவமஹத்தி கொள்வான்

மாவட்டம் : தருமபுரி
வட்டம் : அரூர்
ஊர் : கம்பைநல்லூர்
மொழி : தமிழ்
எழுத்து : தமிழ்
அரசு : விஜயநகரர்
மன்னன் : —

ஆட்சி ஆண்டு : —
வரலாற்று ஆண்டு : கி. பி 15-ஆம் நூற்றாண்டு
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : —
முன் பதிப்பு : —
ஊர்க் கல்வெட்டு எண் : 8 - A, B, C, D.

இடம் : கோட்டைக் கோயில் முன்மண்டப வடபுறச் சுவற்றில் உள்ள துண்டுக் கற்கள்.

குறிப்புரை : ஒரே கல்வெட்டு பிற்காலத்தில் மண்டபத்தைச் சீரமைத்தபோது, இடம் பெயர்ந்து, வரிசை மாறி காணப்படுகிறது. சில பகுதிகள் கிடைக்கவில்லை. கல்வெட்டில் கூட்டு, வாடகை, ஆயம் முதலியவை குறிப்பிடப்படுகின்றன.

கல்வெட்டு :

A

1 ஸ்வஸ்தி ஸ்ரீ ஊன் ஊஹா . . .
2 ரநு ஸம்ராய விபாட . . .
3 குத் தப்புமராயர் கண்ட . . .

B

1 . . . . ருளா நின்ற காலத்து . . . .
2 . . . . ம்மண உடையர் நடத்துகிற ந . . .
3 . . . . யம் கூட்டு வாடகை ஆயம் . . .
4 . . . . ாரியத்துக்கு அஹிதம் பண்ணி . . .

C

1 . . . . க் கரையில் குராற் பசுவைக் . . .
2 . . . . டவன் ட இந்த தன்ம
3 . . . . ரு காமிண்டரும் . . .

D

1 . . . . ண்டாகல கெங் . . .
2 . . . . ருன் பாபத்திலே வி . . .

# 18

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கம்பைநல்லூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 8-E |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : கோட்டைக் கோயில் முன் மண்டப வடபுறச் சுவற்றில் தலை கீழாக உள்ளது

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டு, ஒரு கல்வெட்டின் இறுதி பகுதியாக இருக்க வேண்டும்.

கல்வெட்டு :

1 . . மாகக் குடுத்தேன் . .

2 . . . மாற்றுமவன் கெங் . . .

3 . . . ன . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 3-ஆம் ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 6-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கல்தானிப்பாடி (நரிப்பள்ளி) | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| எழுத்து : | வட்டெழுத்து | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : தனியார் கொல்லையில் உள்ளது.

குறிப்புரை : மன்னன் பெயர் சிதைந்துவிட்டது. வீரனுடைய வலக்கரத்தில் கத்தி உள்ளது. இடக்கரத்தில் வில் அம்பு உள்ளன. மீகொன்றை நாட்டைச் சார்ந்த பற்ற..ளி மாம்கோடு பெருமக்கள் பாப்பான்பாடியிலே ஆநிரைகளைக் கவர்ந்தபொழுது வாணஇரவஞ்சி என்பவன் வீழ்ந்துபட்டதை இக்கல்வெட்டு குறிக்கிறது.

கல்வெட்டு :

1 . . . . . . . . மூன்றாவ[து]
2 . . . . . . . . ஞற்றரைசரு
3 ண்ண கோவரைசரு
4 க்கு . . . . ங் . . . . .
5 மாந்தான . . . .
6 ஞர் மீய்
7 கொன்றைநாட்டு
8 பற்ற . . ளி
9 மாம் கோடு பெரு
10 மக்கள் பறைகட்
11 டியாரு பாப்பா
12 ன்பாடி எறிந்
13 து தொறு கொண்[ட] போ[து]
14 வாண இரவஞ்(சி)
15 பட்டான்
16 கொற்றன் காடன்
17 . . . . . . கல்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி.பி. 8-9-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | குரும்பட்டி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | வட்டெழுத்து | முன் பதிப்பு : | — |
| அரசு : | வாணர் | | |
| மன்னன் : | மாவலிவாணராயர் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : குரும்பட்டி கோழி வீட்டுக் குழந்தை தோட்டத்தில் உள்ள முறி வேடியப்பன்.

குறிப்புரை : வீரனின் வலக்கரத்தில் கத்தி உள்ளது. இடக்கரத்தில் வில் உள்ளது. காதில் குண்டலம் உள்ளது. வலப்புறத்தில் கொண்டை உள்ளது. மார்பில் அம்பு பாய்ந்துள்ளது. இடையில் ஆடை. வலக்கால் உடைந்து விட்டது. கீழே வலப் புறம் கெண்டி உள்ளது. மாவலிவாணகோவரையனது ஆட்சிக்காலத்தில் நிகழ்ந்த ஒரு போரில் புறமலை நாட்டை ஆண்டு வந்த புலையமன்னர் என்பவரது அடியாளும் இநோட்பைப் பெருவணயனின் பேரனுமான தாழன் என்பவன் இறந்து பட்டான். அவனது நினைவாக தீரஏரி பாசனத்தில் 6 செறுவு நிலம் அளித்ததைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்ரீமாவலிவாணகோ [வ]ங்கைமீ ம . . .
2 [டி]ந்த ஞான்று புலையமன்னர்
3 புறமலை நாடாள அவர் அடி
4 யான் . இநோட்பைப் பெருவணய
5 ன் மகன் [ம]கன் பட்டான் தாழன் அவ[ர்]
6 க்கு [நே]த் தோர்ப் பட்டித் தீரஏரி
7 க்கீழ் ஆறு செறுவு பேர்ஏரிக்கீ
8 ழ் க[ரு] மீன் வி
9 ற்று மணட்டி
10 இது அரம
11 ழித்தான்
12 பாதகன்

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 2-ஆம் ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 7-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கூக்கடப்பட்டி | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : | — |
| எழுத்து : | வட்டெழுத்து | | |
| அரசு : | பல்லவர் | முன் பதிப்பு : | — |
| மன்னன் : | ஈச்சுவரபருமன் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : உலகக் கவுண்டர் வயல் நடுவில் உள்ள முத்து வேடியப்பன்.

குறிப்புரை : பல்லவ மன்னன் ஈச்சுவரபருமனுடைய காலத்தில் கந்தவாண்ணதி அரைசர் மேற்கங்கப்படையோடு போரிட்டார். அப்போரில் கந்தவாண்ணதி அரைசருடைய சேவகன், நாவிண்ணதிரனர் என்பவனுடைய மகன் சாத்தன் வீர மரணம் அடைந்தான். அவன் நினைவாக எடுத்தது இக்கல். இக்கல்லில் வீரனுடைய உருவம் குதிரை மீது ஏறிப் போர்க்களம் செல்கின்ற நிலையில் பொறிக்கப்பட்டுள்ளது. வீரன் இடக்கையில் கேடயத்தை முன் நீட்டி வலக்கையில் வேல் பற்றி எய்யும் தோற்றத்தில் பொறிக்கப்பட்டுள்ளான். செருமுனை நோக்கிப் பாய்ந்து செல்லும் வீரனைச் சிற்பி நன்றாக இதில் காட்டியுள்ளான். கல்வெட்டில் மெய்யெழுத்துக்கள் புள்ளியுடன் உள்ளன.

கல்வெட்டு :

1 கோவிசைய ஈச்சுவர பருமற்கு இரண்
2 டாவது கந்தவாண்ணதி அரைசர் மேற்கங்க
3 ப் படைஓ டெறிந்த
4 ஞான்றவர் சேவகன்
5 நாவிண்ணதிரனர் ம
6 கன் சாத்தன் பட்டான்.

மாவட்டம் : தருமபுரி

வட்டம் : அரூர்

ஊர் : கூக்கடப்பட்டி

மொழி : தமிழ்

எழுத்து : வட்டெழுத்து

அரசு : பல்லவர்

மன்னன் : ஈச்சுவரவர்மன்

ஆட்சி ஆண்டு : 2-ஆம் ஆண்டு

வரலாற்று ஆண்டு : கி. பி. 7 ஆம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : —

முன் பதிப்பு : —

ஊர்க் கல்வெட்டு எண் : 2

இடம் : உலகக் கவுண்டர் கொல்லையில் உள்ள வேடியப்பன் கோயில்.

குறிப்புரை : ஈச்சுவர பருமனுடைய இரண்டாவது ஆட்சியாண்டில் கந்தவாண்ணதி அரைசர் மேற் கங்கப்படையோடு போரிட்டார். அப்போரில் இரண்டு வீரர்கள் இன்றைய கூக்கடப்பட்டிக்கருகில் இறந்துபட்டனர். அவர்கள் இருவருக்கும் அங்கே இரு நடுகற்கள் வைத்துப் போற்றியுள்ளனர். இக்கல்லில் அப்போரில் இறந்துபட்ட பராமதாயார் மகன் கண்ணமாறன் குறிக்கப்பட்டுள்ளான். கல்லில் கண்ண மாறனுடைய உருவம் போர்க் கோலத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இடக் கையில் வில்லை முன் நீட்டி வலக்கையில் குறுவாளை ஓங்கிச் செருமுகம் நோக்கிச் செல்லும் அவனது பீடு அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1 ஈச்சுவர பருமற்கு இரண்டாவது கந்தவா

2 ண்ணதி அரைசர் மேற்கங்கப் படைஓடு கலாத்

3 த ஞான்று அவர் சேவகன் பராமதாயார் மகன் கண்

4 [ண] மாறன் பட்டான் [கல்]

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கூடலூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| மொழி : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 1-A |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : பாளைய வேடியப்பன் கோயிலில் உள்ள நடுகல்.

குறிப்புரை : நடுகல்லில் உள்ள வீரனை பாளையக்காரன் என்று மக்கள் வழங்குகின்றனர். கல்வெட்டு, கல்லின் பின்புறம் உள்ளது. கற்கடகமுத்தரையன் கங்கனின் மகனை படலனின் நினைவாக, அவனது தம்பி தித்தன் இந்நடுகல் எடுத்ததைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்ரீ கற்கடக முத்தரையந் கங்க
2 ந் மகந் படலந் இக்கல்லில்
3 இவனையுங் குதிரையும் செ
4 ய்வித்தேன் இவந் தம்பி தி
5 த்தனேந்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 20-ஆம் ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 1032 |
| ஊர் : | கெரஹோடஹள்ளி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | முதல் இராசேந்திரசோழன் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : வேடியப்பன் கோயில்.

குறிப்புரை : கல்வீடு அமைப்புள்ள வேடியப்பன் கோயிலில், நடுக்கல்லில் வீரன் ஒருவனுடைய உருவம் வலக்கையில் குறு வாளும், இடக்கையில் வில்லும் தாங்கியுள்ளது. வீரனது முன் புறத்திலும், பின் புறத்திலும் ஆநிரைகள் பொறிக்கப் பட்டுள்ளன. வீரனுக்கு மேலே இரு தேவ மங்கையர் வீழ்ந்து பட்ட வீரனை விண்ணுலகம் அழைத்துச் செல்லும் காட்சி சித்தரிக்கப் பட்டுள்ளது. கல்வெட்டு இருமருங்கிலும் உள்ள கற்களில் உள்ளது. முதலாம் இராசேந்திரன் காலத்தில் பாகலப்பள்ளி எதிரிகளால் அழிக்கப்பட்ட பொழுது வேசாலிப் பேரையர் மருகன் அண்ணயன் மகன் பப்பையன் என்பவன் எதிர் நின்று போரிட்டு பட்டான். அவனுடைய நினைவாக அவன் மகன் பாலிதேவன் கல் நாட்டினான்.

கல்வெட்டு :

A

1 ஸ்வஸ்தி ஸ்ரீ பூவ-௨தேசமும் கங்
2 கையும் கிடாரமும் கொ
3 ண்ட கோப்பரகேசரி பந்
4 மரான உடையார் ஸ்ரீரா
5 ஜேந்த்ர சோழ தேவற்கு யா
6 ண்டு ௨௰ ஆவது நுளம்
7 ப பாடியாகிய நிகரிலி
8 சோழ மண்டலத்து
9 புறமலை நாட்டுப்

(திருப்பவும்)

10 பாகலப்பள்ளி ஊர் அ
11 ழிய் எதிரே எறிஞ்சு

B

1 பட்டான் வேசாலிப்பே
2 ரையர் மருகன் அண்ணயன்மக
3 ன் பப்பையன் இவன் மகன்
4 பாலிதேவன் இக்கல் நிறுத்தி
5 ஞன்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கெரகோட ஹல்லி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | போசளர் | | |
| மன்னன் : | இராமநாதன் | ஊர்க் கல்வெட்டு எண் | 2 |

இடம் : தேவதான நிலத்தின் வரப்பில் உள்ளது.

குறிப்புரை : முன்னும் பின்னும் உடைந்த துண்டுக் கல்வெட்டு. போசள அரசன் இராமநாத தேவனுடன் தொர்புடைய தேவபெருமாள் என்பவர் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. பிற அறிய இயலவில்லை.

கல்வெட்டு :

1 கிழமையும்
2 பெற்ற மூலத்து
3 நாள் ராமநா
4 ததேவற்கு
5 கு[ஞ்சி]ரான தே
6 வப்பெருமாள்

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 37-ஆம் ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 8-ஆம் நூற்றுண்டு |
| ஊர் : | கைலாவரம் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | வட்டெழுத்து | முன் பதிப்பு : | — |
| அரசு : | பிருதி கொங்கணி | | |
| மன்னன் : | கட்டிணை பருமர் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : கூட்டாத்தூறை வேடியப்பன் கோயிலில் உள்ள நடுகல்.

குறிப்புரை : வலக்கையில் வாளும், இடக்கையில் வில்லுமேந்தியுள்ளான். இடப் புறம் நோக்கி, இடக்காலை முன்வைத்தானகச் சித்தரிக்கப்பட்டுள்ளான். வீரனின் தலைப்புறத்தே கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இடக்காலின் அருகில் சிமிழ் காணப்படுகிறது. கட்டிணை பருமரது முப்பத்தேழாவது ஆட்சி ஆண்டில், கந்தவாணதியரையர் புறமலை நாட்டினை ஆளுங்கால், அருட்டிறைவர் என்பவர் ஆநிரை கவர, அமரநீலியார் சேவகரான பையச்சாத்தனுர் அந்த ஆநிரையை மீட்ட போது இறந்ததைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்ரீ கட்டிணை பருமற்கு யாண்டு முப்பத்தெ
2 ழாவது கந்தவாணதி அரையர் புறமலை நா
3 டாள அருட்டிறையர் தொறுக்கொண்ட
4 ஞான்று அமர நீலியார் சேவகர்
5 பையச்சாத்தனுர் தொ
6 று மீட்டு
7 பட்டார் கல்

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 8-9-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கொண்டல்முடுவு | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : வேடியப்பன் கோயில் நடுகல்.

குறிப்புரை : நடுகல். வீரன் வலக் கையில் குறுவாளும், இடக் கையில் வில்லும் கொண்டுள்ளான். மார்பு, வயிறு, கால் ஆகிய இடங்களில் அம்புகள் தைத்துள்ளன. வலக் கால் பகுதி உடைந்து விட்டது. கல்வெட்டிலும் மேல் பகுதி உடைந்து விட்டது. ஆநிரைமீட்டு இறந்த வீரனுக்காக எடுக்கப்பட்ட நடுகல்.

கல்வெட்டு :

1 . . . க ண் . . .
2 . . . மை . . . . தொறு மீட்
3 . . . டு பட்டான்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 7-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கொண்டல்மடுவு | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | வட்டெழுத்து | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |
| மன்னன் : | — | | |

இடம் : வேடியப்பன் கோயில்.

குறிப்புரை : சிறு துண்டுக் கல்வெட்டு.

கல்வெட்டு :

1 . . . . . . . . . . . . . . .
2 . . பொன்ன . . . . . .
3 . . குடுமாணிற் . . . . .
4 . . கரளா உ . . . . . . .
5 . . கொடு . . . . . . .
6 குடு[ப்]

# 29

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | தருமபுரி | ஆட்சி ஆண்டு : | 20-ஆம் ஆண்டு |
| வட்டம் : | அரூர் | வரலாற்று ஆண்டு : | கி. பி. 8-9-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | கோட்டரம்பட்டி | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | வட்டெழுத்து | முன் பதிப்பு : | — |
| அரசு : | நுளம்பர் | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : இவ்வூருக்குச் செல்லும் சாலையின் அருகே உள்ள நடுகல்.

குறிப்புரை : கல்லின் முன்பகுதி உடைந்து விட்டது. ஒவ்வொரு வரியிலும் முன்னெழுத்துக் கள் மறைந்து விட்டன. வீரன் இடக்கையில் வில்லும், வலக்கையில் குறுவாளும் ஏந்தியுள்ளான். உச்சிக் கொண்டை இட்டுள்ளான். மூன்று அம்புகள் முன் புறம் பாய்வது போல உள்ளன காலின் கீழே ஒரு கெண்டி உள்ளது. நாகமங்கலக் காவிதிகள் என்பவன் இறந்ததைக் குறிக்கிறது. 'கக்க வலேயன்' என்ற பெயர் ஒன்றும் குறிக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1　. . . . யந்தா நுளம்பனுக்கு இருபதா
2　. . . . செல்லா நின்ற கக்கவலேயன்
3　. . கள் ஞகமங்கலக் காவிதிகள்
4　. . . . விற் பட்டான்
5　. . . . னிம
6　. . . . த்தா
7　. . . . முன்
8　. . . . ய்தான்
9　. . . . செல
10　. . . . ல
11　. . . . யதான்

